உ

சிவமயம்

# திருக்கானப்பேர்ப் பாமாலை

தொகுப்பு

'தமிழ்க்கடல்' 'சிவமணி'
'சிவம்பெருக்கும் சீலர்'
ராய. சொ.

வெளியீடு

சொ. மெ. பழ. சோம.
சோமசுந்தரம் செட்டியார்
தேவகோட்டை

உ

சிவமயம்

# திருக்கானப்பேர்ப்பாமாலை

## நூல் முகம்

பாண்டி நாட்டிலுள்ள தேவாரப் பதிகம் பெற்ற தலங்கள் பதினான்கனுள் திருக்கானப்பேர் என்ற காளையார் கோயில் ஒன்று. இத்தலம் இராமநாதபுரம் மாவட்டத்தில் நாட்டரசன் கோட்டை இரயில் நிலையத்தினின்று ஆறு கல் தொலைவிலும், சிவகங்கை—தொண்டி பெரு வழிச் சாலையில், சிவகங்கையினின்றும் பதினேரு கல் அளவிலும் இருக்கின்றது. இத்தலத்தில் மூன்று இறைவனும், மூன்று இறைவியும் எழுந்தருளி யிருக்கின்றனர்.

1. காளீசர் — சொர்ணவல்லி
2 சோமேசர் — சௌந்தரநாயகி
3. சொக்கேசர் — மீனுட்சி

இத்தலத்தில் இராசகோபுரம் பெரியது; மருது பாண்டியன் கட்டியது. இக்கோபுரம் சோமேசர் சந்நிதிக்கு எதிரில் இருக்கிறது. கோவிலே ஒட்டி மிகப்பெரிய தெப்பக்குளம் ஒன்று இருக்கிறது. தேவகோட்டை ஜமீன்தார் அழ. அரு. இராமசாமிச் செட்டியார் அவர்களும், தேவகோட்டை தி. ராம. தி., தி. ராம. சு., குடும்பத்தாரும், தேவகோட்டை P. S. S. சோமசுந்தரம் செட்டியாரும், ஒக்கூர் சி. கரு. ஆ. கண்ணப்ப செட்டியாரும், அமராவதி புதூர் வயிநாகரம் குடும்பத்தாரும் இக்கோயிலில் நிறைந்த பொருட் செலவில் திருப்பணி செய்திருக்கிருர்கள்.

இங்கு பெரிய வேதாந்த மடம் ஒன்று இருக்கின்றது. நகரத்தாருக்கு இத்தலத்தில் பல அறச்சாலேகள் இருக்கின்றன.

இத்தலத்திற்குத் திருஞான சம்பந்தர் தேவாரப் பதிகம் ஒன்றும் சுந்தர மூர்த்திகள் தேவாரப்பதிகம் ஒன்றும் இருக்கின்றன. அப்பர் சுவாமிகளின் தனித் தேவாரப் பதிகம் இல்லாவிட்டாலும் ஒன்பது பாடல்களில் இத்தலம் குறிக்கப் பெறுகின்றது. இத்தலத்தைப் பற்றி, திருமுறையில் உள்ள பாடல்களையும் பிற பெரியார்கள் பாடிய பாக்களையும் தொகுத்து, பொழிப்பும் விளக்கமும் கொடுத்து, ஒரு நூல் ஆக்கித் தர வேண்டுமென்று, கானப்பேர்த்-தலத்தில் தம் முன்னோர்களைப் போலவே பெரிதும் ஈடுபாடு உடைய, சிவநெறிச் செல்வர், அன்பர் அழ. அரு. ராம. வெ. சோம. நாராயணன் வேண்டினார். அவர் விருப்பத்துக்கு இணங்க இம்மாலை இன்று மலர்கின்றது.

இப்பாமாலை 52 மலர்களைக் கொண்ட ஒரு தொகுப்பு. அவை வருமாறு:

| | | |
|---|---|---|
| சம்பந்தர் தேவாரம் (முதல் திருமுறை) | ... | 1 |
| ஷை (இரண்டாம் திருமுறை) | ... | 1 |
| ஷை (மூன்றாம் திருமுறை) | ... | 11 |
| அப்பர் தேவாரம் (நான்காம் திருமுறை) | ... | 2 |
| ஷை (ஐந்தாம் திருமுறை) | ... | 1 |
| ஷை (ஆறாம் திருமுறை) | ... | 6 |
| சுந்தரர் தேவாரம் (ஏழாம் திருமுறை) | ... | 12 |
| கல்லாடதேவர் (பதினொராம் திருமுறை) | ... | 1 |
| கபிலதேவர் ,, ,, | ... | 1 |
| பரணதேவர் ,, ,, | ... | 1 |
| சேக்கிழார் அடிகள் (பன்னிரண்டாம் ,, | ... | 8 |
| உமாபதி சிவம் | ... | 2 |
| பரஞ்சோதிமுனிவர் (திருவிளையாடல்) | ... | 1 |
| அருணகிரிநாதர் (திருப்புகழ்) | ... | 2 |
| தனிப்பாடல்–பாண்டிபதினான்கு | ... | 1 |
| குமரகுருபரர் (மீனாட்சி குறம்) | ... | 1 |
| ஆக | ... | 52 |

திருமுறைகளில் இத்தலத்தைப் பற்றிக் கூறப்பெற்ற பாக்கள் இவ்வளவுதாம் என்பதை நான் அறுதியிடவில்லை. அன்பர் சோம. நாராயணன் எடுத்துத்தந்த பாக்களுக்குப் பொருள் எழுதிய பொறுப்புத்தான் என்னுடையது.

இத்தலத்தைத் தேவாரத்திருமுறை ஏழும் குறிக்கின்றது. 8, 9, 10 ஆம் திருமுறைகளில் இத்தலத்தைப் பற்றி ஏதும் இல்லை. 11, 12 இல் இத்தலம் பேசப்பெறுகின்றது.

தேவாரத் திருமுறை ஏழனுள் ஐந்தாம் திருமுறையில் இத்தலத்தின் பெயர் குறிக்கப் பெறவில்லை. எனினும் இத்தலத்தின் பெயருக் குரிய இறை பெயராகிய 'காளை' அப்பாடலில் வருதலால் அப்பாடலை எடுத்துக் கொள்ளலாம் என்ற, அன்பர் சோம. நாராயணன் விருப்பத்தை ஏன் மறுக்க வேண்டும்?

பதினொராம் திருமுறையில் வந்த கல்லாட தேவரின் கண்ணப்பர் மறத்தில் 'கானப்பேருறை கண்ணுதல்' என்று வரும் சொல் தொடரைக் கொண்டு, அப்பாடலை இத்தலத்திற்கு உரிமையாக்கிக் கொள்கின்றோம் கண்ணப்பர் காதை நடந்தது திருக்காளத்தியில் 'கானப்பேர்' என்பதற்குப் 'பெரிய காடு' என்று பொருள் கொள்ளலாம். எனினும் இத்தலத்தைக் குறிக்கும் கானப்பேர் என்ற சொல் தொடரையே கையாண்டிருப்பதால் அன்பின் வடிவமாம் கண்ணப்பரின் சிறந்த காதையை அழகாகச் சித்தரிக்கும் இவ் அரிய பாடலை இத்தலப் பாமாலையில் சேர்த்துப் பார்த்துப் பெருமையடைவோம்.

"சேதுபதி விறலிவிடுதூது" என்ற நூலில் இத்தலத்தைக் குறிக்குங்கால்,

பொய்ப்பிள்ளை யாயிருந்த
    பொற்பிள்ளை பாண்டியற்கு
மெய்ப்பிள்ளை யான வியன்நகரும்...

என்று பாராட்டப் பெறுகின்றது. இன்னோரன்ன வரலாற்றைத் தலபுராணத்தில் காண்க.

இப்பாமாலையை மலருவிக்கத் தூண்டிய அன்பர் சோம. நாராயணனுருக்கும் இதனை வெளியிடும், காளையார்கோவிலில் பசுமடம் நிறுவி அறப்பணி புரிந்துவரும் தேவகோட்டை சொ. மெ. பழ. குடும்பத்தைச் சேர்ந்த சோம. சோமசுந்தரனுருக்கும் நன்றி. இதற்குத் தோன்றாத் துணையாக இருந்த முழுமுதற்கடவுளுக்கு வணக்கம்.

19—3—1967
காரைக்குடி.

ராய. சொ.

முதலாவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

சிவபெருமான், எலும்பை அணிந்தவர்;

கைலை மலையை ஆள்பவர்;

கானப்பேர் என்னும் காளையார் கோவிலில் ஆட்சி செலுத்துபவர்;

தேவிக்கு உடம்பில் ஒரு கூறு அளித்தவர்;

முத்தலை வேல்படையை உடையவர்;

இடபத்தில் ஏறுபவர்;

அவர் தங்கும் கோயில் எது?

மணம் பொருந்திய அந்தச்சோலையிலே புகுந்து, கூர்மையான தன் வாயால் இறக்கைகளை உலரச் செய்து, வாடையினின்றும் விடுபட்டு, சிவந்த காலை உடையநல்ல வெள்ளைப்பறவை, பசிய புனத்தில் உணவைத்தேடி உண்ணும் திரு ஐயாறு ஆம்.

விளக்கம்:

கங்காளம்: எலும்பு. கொங்கு: மணம். பொழில்: சோலை. குருகு: பறவை.

பாடல் எண். 1

முதல் திருமுறை

கங்காளர் ; கயிலாய மலையாளர் ;
கானப்பேர் ஆளர் ; மங்கை

பங்காளர் ; திரிசூலப் படையாளர் ;
விடையாளர் , பயிலும் கோயில் ?

கொங்குஆள்அப்பொழில்நுழைந்துகூர்வாயால்
இறகுஉலர்த்திக் கூதல் நீங்கிச்

செங்கால்நல் வெண்குருகு பைங்கானல்
இரைதேரும் திருவை யாறே.

— சம்பந்தர்.

2-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

திருவாரூர், தில்லைச் சிற்றம்பலம், திருவல்லம், திருநல்லம், வடபகுதியிலுள்ள கச்சிஏகம்பம், அச்சிறுபாக்கம், நல்ல கூரூர், குடவாயில், கும்பகோணம், கோவில் வெண்ணி, கடலால் சூழப்பெற்ற திருக்கழிப்பாலை, தெற்கேயுள்ள கோடி குழகர் கோயில், பெருமை நிறைந்த புனல் சூழ்ந்த வயலையுடைய திருநின்றியூர், குன்றியூர், குருகாவூர், திருநாறையூர், நீண்ட கானப்பேரூர், நல்ல நெடிய வயல் சூழ்ந்த திருநெய்த்தானம் என்னும் தலங்களையெல்லாம் பன்னிப்பன்னிச் சொல்லிக்கொண்டிருப்பாயாக! இவை பிறைசூடும் பெருமான் தங்கியிருக்கும் பேரிடங்கள் ஆம்.

விளக்கம்:

கூரூர், குன்றியூர் வைப்புத்தலங்கள். ஏனைய, தேவாரத்தலங்கள். கழிப்பாலை முன்னே கடலை ஒட்டியிருந்தமையால் கடல் சூழ்கழிப்பாலை என்று கூறப்பெற்றது. பீடு: பெருமை. கானப்பேரூர்: காளையார்கோயில். பிதற்றுதல்: திருப்பித் திருப்பிச் சொல்லுதல். பிறை: இளம்சந்திரன்.

பாடல் எண். 2

இரண்டாம் திருமுறை

ஆரூர், தில்லைஅம் பலம்,வல்லம், நல்லம்,
வடகச்சி யும்,அச் சிறுபாக்கம், நல்ல

கூரூர், குடவாயில், குடந்தை, வெண்ணி,
கடல்சூழ் கழிப்பாலை, தென்கோடி, பீடார்

நீரூர் வயல்நின்றி யூர்,குன்றி யூரும்,
குருகாவை யூர்,நாரை யூர்,நீடு கானப்

பேரூர், நல்நீள் வயல்நெய்த் தானமும்,
பிதற்றாய்; பிறைசூடி தன்பே ரிடமே.

— சம்பந்தர்.

3-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

பெண்யானைகளெல்லாம் பின் தொடர்ந்து வர, பெரிய துதிக்கையையுடைய ஆண் யானைகள் புலர் பொழுதில், நீர் நிலையிலே குளித்துப் பூவைக்கைக் கொண்டு, முறைப்படி வழிபாடு செய்யும் மணம் தங்கிய நந்தன வனங்களையுடைய கானப்பேர்த் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானே! உன்னுடைய திருவடியைத் தவிரப் பொருந்தத் தக்க பற்று வேறு உடையாரோ அடியார்கள்?

விளக்கம்:

பிடி: பெண்யானை. பெருங்கைமா: ஆண்யானை. விடியல்: புலர்பொழுது. தடம்: தடாகம். விதியினால்: முறைப்படி. கடி: மணம். பூம்பொழில்: நந்தவனம். அடி: திருவடி. சரண்: புகலிடம்.

பாடல் எண். 3

மூன்றும் திருமுறை

பிடிஎலாம் பின்செலப்
பெருங்கைமா மலர்தழீஇ,

விடியலே தடமூழ்கி,
விதியினால் வழிபடும்

கூடி உலாம் பூம்பொழில்
கானப்பேர் அண்ணல்! நின்

அடி அலால் அடைசரண்
உடையரோ அடியரே.

— சம்பந்தர்.

## 4-ஆவது பாட்டின் பொருள்

### பொழிப்பு:

சிறுகிய இடையையும், பெருகிய கடிதடத்தையும், சிலம்பணிந்த திருவடியையும் உடைய உமையவளாகிய நல்லவளைத் தன்னுடம்பில் ஒரு பக்கத்திலே பேணி வைத்துக் கொண்டான்; நெற்றியில் கண்பெற்றான்; அவன் விரும்பி உறையும் கானப்பேருரை, வான் உலகை விரும்பி வாழ்வோரும் காதலிக்கும் செயலை மேற்கொள்வர்.

### விளக்கம்:

நூபுரம்: சிலம்பு. பேணுதல்: போற்றி வைத்தல். வேட்கை: ஆசை. கருமம்: செயல்.

பாடல் எண். 4

மூன்றும் திருமுறை

நுண்இடைப் பேர்அல்குல்
நூபுரம் மெல்அடிப்

பெண்ணின்நல் லாளைஓர்
பாகமாப் பேணினன்,

கண்ணுடை நெற்றியான்,
கருதிய கானப்பேர்

விண்ணிடை வேட்கையார்
விரும்புதல் கருமமே.

— சம்பந்தர்.

## 5-ஆவது பாட்டின் பொருள்

### பொழிப்பு:

தடாகத்திலே தங்கியிருக்கின்ற சிறிய இறக்கைகளையுடைய வண்டுக் கூட்டங்கள் நீலோற்பலப் பூவிலே தேனுண்டு இசைபாடும் கானப்பேர்க் கடவுளை, கத்தூரி கலந்த சந்தனத்தையும் பூவையும் இட்டு, ஞான நீர் பெய்து, நின்று நீராட்டுவார்கள் அடியார்கள்.

### விளக்கம்:

வாவி: நீர் நிலை. காவி: நீலோற்பலம். பண்: இசை. நாவி: கத்தூரி. சாந்து: சந்தனம்.

பாடல் எண். 5

மூன்றும் திருமுறை

வாவிவாய்த் தங்கிய
நுண்சிறை வண்டினம்,

காவிவாய்ப் பண்செயும்
கானப்பேர் அண்ணலை,

நாவிவாய்ச் சாந்துளும்,
பூவுளும் ஞானநீர்

தூவிவாய்ப் பெய்துநின்று
ஆட்டுவார் தொண்டரே.

— சம்பந்தர்.

6-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

நிறைவுபெற்ற உள்ளத்துக்குள்ளும், அடியார்கள் ஆட்டும் நீருக்குள்ளும், இடும் பூவுக்குள்ளும், ஒலியை எழுப்புகின்ற மத்தளத்துக்குள்ளும், இடுகின்ற உணவுக்குள்ளும், பாடுகின்ற பாட்டுக்குள்ளும் இடங்கொண்ட, நஞ்சு தங்கிய கழுத்தை-யுடைய அண்ணல் தங்கிய கானப்பேரை வணங்கும் அடியவர்கள் அல்லால் குறையுடைய ஏனையோர் குற்றங்களை நீக்கமாட்டார்.

விளக்கம்:

பறை: ஒலி. முழவு: மத்தளம். பலி: நிவேதனம். கறை: நஞ்சு. மிடறு: கழுத்து.

பாடல் எண். 6

மூன்றும் திருமுறை

நிறையுடை நெஞ்சுளும்,
நீருளும், பூவுளும்,

பறையுடை முழவுளும்,
பலியுளும், பாட்டுளும்,

கறையுடை மிடற்றுஅண்ணல்
கருதிய கானப்பேர்

குறையுடை அவர்க்கலால்
களைகிலார் குற்றமே.

— சம்பந்தர்.

7-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

பன்றியின் கொம்பை அணிந்த மார்பின் மீது எலும்பைப் போட்டுக் கொண்டு, முடிவில்லாத அறிவுப் பேர் ஆயிரம் உடையான் பொருந்திய கானப்பேர் என்னும் ஊரை வணங்கும் பேரன்பு உடையார், தீதினை அணுகார்; சிறந்த விண்ணுலகப் பேருருக்குச் செல்லும் திறத்திலும் வல்லவராவார்.

விளக்கம்:

ஈறு: முடிவு. ஏனம் : பன்றி. பூண் : ஆபரணம். வண்ணம்: திறம்.

பாடல் எண். 7

மூன்றும் திருமுறை

ஏனப்பூண் மார்பின்மேல்
என்புபூண்டு, ஈறிலா

ஞானப்பேர் ஆயிரம்
பேரினன் நண்ணிய,

கானப்பேர் ஊர்தொழும்
காதலார் தீதிலர்;

வானப்பேர் ஊர்புகும்
வண்ணமும் வல்லரே.

— சம்பந்தர்.

## 8-ஆவது பாட்டின் பொருள்

### பொழிப்பு:

அடர்ந்த சடையின் மீது பள்ளம் ஆமாறு பாய்ந்து செல்லும் நீர்ப்பெருக்கை உடைய கங்கையைத் தாங்கினன், வெள்ளிய திங்களை அணிந்தான் உறைகின்ற, வஞ்சனையில்லாதார் காதலிக்கும் கானப்பேர் என்னும் தலத்தை, மனத்தைக் கோயிலாகக் கொண்டு எண்ணும் என் சிந்தை.

### விளக்கம்:

பள்ளம்: குழி. சடைப்பால்பட: சடையின் மீது பொருந்த. வெள்ளம்: கங்கை. கள்ளம்: வஞ்சனை. உள்குதல்: நினைத்தல்.

பாடல் எண். 8

மூன்ரும் திருமுறை

பள்ளமே படர்சடைப்
பால்படப் பாய்ந்தநீர்

வெள்ளமே தாங்கிஞன் ;
வெண்மதி சூடிஞன் ;

கள்ளமே செய்கிலார்
கருதிய கானப்பேர்

உள்ளமே கோயிலா
உள்கும்என் உள்ளமே.

— சம்பந்தர்

## 9-ஆவது பாட்டின் பொருள்

**பொழிப்பு:**

பெருமை மிக்க, சிறந்த இளைய பெண்யானை, தன் வலிய கையால் தழுவிக்கொள்ள, காட்டில் வாழும் மதம் பொழியும் ஆண்யானை, அப்பிடியொடு சென்று வணங்கும் கானப்பேர்த் தலத்தை, இழிந்த உடலிலே பொருந்தும் நோய் நீக்கம்பெற நினைந்தால், அறிவுக்கு உறுதுணையான நல்ல பூக்களைக் கொண்டு பொருந்துதல் நலம் பயக்கும்.

**விளக்கம்:**

மானம்: பெருமை. மா: சிறப்பு. மடம்: இளமை. பிடி: பெண்யானை. அலகிட: தழுவிக்கொள்ள. கானம்: காடு. கடம்: மதம். கரி: ஆண் யானை. ஊனம்: இழிவு. உறுபிணி: வந்த நோய். தணுகுதல்: பொருந்துதல்.

பாடல் எண். 9

மூன்றும் திருமுறை

மானமா மடப்பிடி
வன்கையால் அலகிடக்

கானமார் கடகரி
வழிபடும் கானப்பேர்,

ஊனமாம் உடம்பினில்
உறுபிணி கெடஎண்ணில்,

ஞானமா மலர்கொடு
நணுகுதல் நன்மையே.

— சம்பந்தர்

## 10-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

வாளாயுதத்தையும் வேற்படையையும் தாங்கிய பெரிய கயிலைமலையைத் தூக்கிய வலிய தோள் கொண்ட இராவணனின் நீண்ட முடி அழியுமாறு, அழுத்திய காலை உடைய சிவபிரான் தங்கிய கானப்பேரை, தலை தாழ்த்திக் கும்பிடுவார், நாளுக்கு நாள் சிறக்கும் ஒப்பற்ற நலத்தை அடைவார்.

விளக்கம்:

மால்: பெரிய. தோளினன்: இராவணன். தாள்: திருவடி.

பாடல் எண். 10

மூன்றும் திருமுறை

வாளினன், வேலினன்,
மால்வரை எடுத்ததிண்

தோளினன், நெடுமுடி
தொலையவே ஊன்றிய

தாளினன், கானப்பேர்,
தலையினல் வணங்குவார்,

நாளும்நாள் உயர்வதோர்
நன்மையைப் பெறுவரே.

— சம்பந்தர்

## 11-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு.

வில்லினால் மூன்று நகரங்களையும் தீப்பற்றி எரியுமாறு அழித்தவனும் நிலைபேறு இல்லாத திருமால், பிரமன் என்ற இருவரின் தன்மையைக் கண்டு வளர்ந்தவனும் ஆகிய, கலை வல்லவர் வாழும் சோலையில் தேன்மணக்கின்ற கானப் பேருரைத் தலை தாழ்த்திப் பணிவோர் தவமுடையாராவர்.

விளக்கம்:

சிலை: மலையாகியவில். செறுதல்: அழித்தல். இருவர்: திருமால், பிரமன். புறவு: சோலை.

பாடல் எண். 11

மூன்றும் திருமுறை

சிலையினால் முப்புரம்
தீஎழச் செற்றவன்,

நிலையிலா இருவரை
நிலைமைகண்டு ஓங்கினான்,

கலையினார், புறவில்தேன்
கமழ்தரு கானப்பேர்

தலையினால் வணங்குவார்
தவமுடை யார்களே.

— சம்பந்தர்

## 12-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

உறியைத் தூக்கிக்கொண்டு, சுரையின் குடுக்கையைக் கையில் பிடித்துக் கொண்டு தலை மயிரைப் பிடுங்குதலும், போர்த்துக் கொள்ளுதலும் பயன் தரமாட்டா. பாவிகளே! துதிக்கையை அசைத்துக்கொண்டிருக்கின்ற இளம் பெண்யானை, வளர்கின்ற சிறிய கொழு கொழுத்த கொடிகளைக் கடித்து எழுகின்ற கானப்பேர் அண்ணலைக் கை வணங்குதல் கடமையாம்.

விளக்கம்:

சுரைக்குண்டிகை: சுரைக்குடுக்கை. உறிதூக்கி, குண்டிகை பிடித்து, உச்சி பிடுங்கலும், உடம்பு போர்த்தலும் சமணக் கொள்கை. மறித்தல்: அசைத்தல். கறித்தல்: கடித்தல்.

பாடல் எண். 12

மூன்றும் திருமுறை

உறித்தலைச் சுரையொடு
குண்டிகை பிடித்துஉச்சி

பறித்தலும், போர்த்தலும்
பயன் இலை பாவிகாள்!

மறித்தலை மடப்பிடி,
வளர்இளம் கொழுங்கொடி

கறித்தெழு கானப்பேர்
கைதொழல் கருமமே.

— சம்பந்தர்

## 13-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

சுடுகாட்டில் ஆடல் உகந்தவன் விரும்பிய கானப் பேர் நகரத்தை, நீர்நிலையில் இளைய வரால் மீன்கள் துள்ளும் சீர்காழியில் வந்த, நாட்டிலே உயர்ந்த சிறப்புமிக்க ஞான சம்பந்தனுடைய பாடல்களாகிய இவை பயில வல்லார்க்குப் பாபம் இல்லையாம்.

விளக்கம்:

நான்கு வரியிலும் 'அத்து' சாரியை. கோட்டகம்: நீர்நிலை. குதிகொளல்: துள்ளுதல். சம்பந்தன: சம்பந்தனுடைய.

பாடல் எண். 13




மூன்றாம் திருமுறை

காட்டகத்து ஆடலான்
கருதிய கானப்பேர்,

கோட்டகத்து இளவரால்
குதிகொளும் காழியான்,

நாட்டகத்து ஓங்குசீர்
ஞானசம் பந்தன

பாட்டகத்து இவைவலார்க்கு
இல்லையாம் பாவமே.

— சம்பந்தர்

## 14-ஆவது பாட்டின் பொருள்

திரு ஆனைக்காவில் எழுந்தருளியிருக்கிற கடவுளை, திருவாரூரில் பொருந்திய அம்மானை, கானப் பேரூரில் தோன்றிய வெல்லத்தை, திருக்கானூரில் உண்டான கரும்பினை, அமரர் உலகத்தவரும் வந்து தொழும் திருவாய்மூரில் வாழும் வலம்புரிச் சங்கை, பெருமைமிக்க கயிலைமலையில் வாழ்கின்ற இளயானையை, திங்களை, கதிரை மறக்கமாட்டேன்.

**விளக்கம்:**

அணங்கு: தெய்வம். மழகளிறு: இளயானை.

பாடல் எண். 14

நான்காம் திருமுறை

ஆனைக் காவில் அணங்கினை,
ஆரூர் நிலாய அம்மானை,

கானப் பேரூர்க் கட்டியைக்,
கானூர் முளைத்த கரும்பினை,

வானப் பேரார் வந்துஏத்தும்
வாய்மூர் வாழும் வலம்புரியை,

மானக் கயிலை மழகளிற்றை,
மதியைச் சுடரை மறவேனே.

— அப்பர்

## 15-ஆவது பாட்டின் பொருள்

### பொழிப்பு:

இழிந்த பெயர் நீங்குமாறு செய்தார்; படித்து உணருமாறு திருவுளம் கொண்டார்; அறிவுச்சுடர் கொளுத்தும் அவர் பெயரைச் சொல்லுமாறு பணித்தார்; அறிவும் நடுநிலைமையும் தந்தார்; விண்ணின்று இழியும் கங்கையைச் சடையில் தரித்தார்; வைகுந்த நாதனாகிய நாராயணனுக்குச் சக்கரம் ஈந்தார்; கானப்பேர் என்னும் காளையார் கோயிலில் காதல்கொண்டார், கழிப்பாலை என்னும் கடற்கரைத் தலத்தில் வாழும் சிவபெருமான்.

### விளக்கம்:

ஆறு: கங்கை. வைகுந்தன்: திருமால். ஆழி: சக்கரம். கழிப்பாலை: ஒரு தேவாரத்தலம்.

பாடல் எண். 15

நான்காம் திருமுறை

ஊனப்பேர் ஒழிய வைத்தார்;
ஓதியே உணர வைத்தார்;

ஞானப்பேர் நவில வைத்தார்;
ஞானமும் நடுவும் வைத்தார்;

வானப்பேர் ஆறு வைத்தார்;
வைகுந்தற்கு ஆழி வைத்தார்;

கானப்பேர் காதல் வைத்தார்;
கழிப்பாலைச் சேர்ப்ப னூரே.

— அப்பர்

16-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

திருமாலோடு பிரமன், தேவேந்திரன், யானைமுகன், முருகன் இவர் அனைவரும் தொழுகின்ற திருவடியை உடைய முழுமுதல், திருப்பூவனூர் என்னும் தலத்தில் பொருந்திய காரணனுவான்; அவனே என்னை ஆட்கொண்ட காளையும் ஆவான்.

விளக்கம்:

வாரணன்: யானை முகத்தை உடையவன். காளை: கானப்பேருர்க் கடவுளின் பெயர்.

பாடல் எண். 16

ஐந்தாம் திருமுறை

நார ணன்ஞெடு
நான்முகன், இந்திரன்,

வார ணன்,கும-
-ரன்வணங் கும்கழல்,

பூர ணன்,திருப்
பூவனூர் மேவிய

கார ணன்,எனை
ஆளுடைக் காளையே.

— அப்பர்

17-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

கரைபொருந்திய நீர்கொண்ட கெடில ஆறு சூழ்ந்த அதிகை வீரட்டமும், திருப்பாதிரிப்புலியூரும், திரு ஆமாத்தூரும், நீர்த்துறை பொருந்திய காட்டில் தவம் செய்யும் இருடிகள் தொழநின்ற திருச்சோற்றுத் துறையும், திருத்துருத்தியும், திருநெய்த்தானமும், ஒலியைப் பெருக்கிக் கொண்டு நீர் ஓடும் காவிரியால் சூழப்பெற்ற திருவையாற்று அமுதன் உறைகின்ற திருப் பழனமும், நல்ல இருள் நிறைந்த சோலை தழுவிய கானப்பேரும், திருக்கழுக்குன்றும் தங்கள் காப்புக்களாக அமைவன.

விளக்கம்:

சிறை: கரை. துறை: வழி. அறை: ஓசை. கறை. இருள்.

பாடல் எண். 17

ஆறாம் திருமுறை

சிறையார்பு னல்கெடில
 வீரட் டம்மும்,
  திருப்பாதி ரிப்புலியூர்,
   திருஆ மாத்தூர்,

துறையார்வ னமுனிகள்
 ஏத்த நின்ற
  சோற்றுத்து றை,துருத்தி,
   நெய்த்தா னம்மும்,

அறையார்பு னல்ஒழுகு
 காவி ரீசூழ்
  ஐயாற்று அமுதன்,
   பழனம் நல்ல

குறையார்பொ ழில்புடைசூழ்
 கானப் பேரும்,
  கழுக்குன்றும், தம்முடைய
   காப்புக் கள்ளே.

— அப்பர்

## 18-ஆவது பாட்டின் பொருள்

### பொழிப்பு:

தேன் பொருந்திய மலரிலே வண்டுகள் உண்ணு கின்ற கொன்றைமாலையை உடையவனுவான்; கச்சி ஏகம்பத்து உறைவான்; வண்டுகள் குடித்துக் களிக்கும் ஞானப்பூங்கோதையை உடம்பின் ஒரு கூற்றிலே உடையவன் ஆவான்; ஆணிற் சிறந்தவனுவான்; அறிவுப் பிழம்பு ஆயினுன்; பெரிய விண்ணுலகத்தாரும் அறியுமாறு ஓடி, ஆடி நின்றுன்; வண்டு ஒலிக்கும் பொழில் சூழ்ந்த கானப்பேரை ஊராகக் கொண்டான்; நஞ்சுபொருந்திய கழுத்தை உடையான்; திருக் காளத்தியைக் கோயிலாகக் கொண்டான்; அவன் எப்பொழுதும் என் கண்ணுள் உளனுவான்.

### விளக்கம்:

ஞானப்பூங்கோதை திருக்காளத்தி அம்பிகையின் பெயர். ஞானத்துஒளி: அறிவுப்பிழம்பு மட்டித்து: கால் மடித்து.

பாடல் எண். 18

ஆறும் திருமுறை

தேனப்பூ வண்டுஉண்ட
கொன்றை யான்காண்;
திருஏகம் பத்தான்காண்;
தேன்ஆர்ந்து உக்க

ஞானப்பூங் கோதையாள்
பாகத் தான்காண்;
நம்பன்காண்; ஞானத்து
ஒளியா னுன்காண்;

வானப்பேர் ஊரும்
அறிய ஓடி,
மட்டித்து நின்ருன்காண்;
வண்டுஆர் சோலைக்

கானப்பேர் ஊரான்காண்;
கறைக்கண் டன்காண்;
காளத்தி யான், அவன்என்
கண்ணு ளானே.

— அப்பர்

19-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு.

மதம் பொருந்திய களிப்புடைய யானையின் தோலைப் போர்த்துக்கொண்டார்; கானப்பேர்த் தலத்தை விரும்பி ஏற்றார்; பேரன்புடன் அறிவைத் தம்பால் வைத்துப் பித்தரான தொண்டரின் உள்ளத்தில் விற்றிருப்பார்; மானை உரித்த தோலை அணிந்த தோளை உடையார்; அம்பிகை காணக் கூத்தாடுவார்; பாம்பை அணிந்து கொண்டார்; நான்கு வேதங்களையும், ஆறு அங்கங்களையும் சொன்ன நாவை உடையார்; படம் எடுத்த பாம்பு பொருந்திய திருமுடியை உடையார்; பசுமையான கண்ணை உடைய இடபத்தில் ஏறுவார்; பிச்சை வாங்குவார்; பந்தணை நல்லூர் என்னும் தலத்தில் மேவிய பரமர்.

விளக்கம்:

கடம்: மதம். உரிவை: தோல். பலி: பிச்சை.

பாடல் எண். 19

ஆறும் திருமுறை

கடமன்னு களியானை
உரிவை போர்த்தார்;
கானப்பேர் காதலார்;
காதல் செய்து,

மடமன்னும் அடியார்தம்
மனத்தில் உள்ளார்;
மான்உரிதோல் மிசைத்தோளார்;
மங்கை காண

நடமன்னி ஆடுவார்;
நாகம் பூண்டார்;
நான்மறையோடு ஆறுஅங்கம்
நவின்ற நாவார்;

படமன்னு திருமுடியார்;
பைங்கண் ஏற்றூர்;
பலிஏற்றூர்; பந்தணை
நல்லூ ராரே.

— அப்பர்

## 20-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

மறைக்காட்டு உறைவார்; வலிவலம் மேயார்; திருவாய்மூர் சேர்வார்; திருவாள்கொளிப்புத்தூர் பொருந்தினார்; திருமாகாளத்தில் அமர்ந்தார்; நஞ்சுகாட்டும் கழுத்தை உடையார்; காபாலீச்சுரம் அமர்ந்தார்; திருக்கற்குடி இருந்தார்; விற்குடி விரும்பினார்; கானப்பேர் ஆண்டார்; பறை ஓசைக்கு ஆடுகின்ற குழிந்த விழியாகிய கண்கள் பெற்ற பல பேய்கள் தன்னைச்சூழ, பழையனூர் திருவாலங்காட்டிலே பொருந்திய அடிகள், அந்த நாளில் அச்சத்தைத் தருகின்ற கொடிய ஒப்பற்ற இயமன் அழியுமாறு சாடினார்; திருவீழிமிழலை மேவிய விகிர்தனார்.

விளக்கம்:

கறை: நஞ்சு. காபாலி: மயிலாப்பூர் இறைவன் பெயர். மிறை: அச்சம். வீட: அழிய.

பாடல் எண். 20

ஆறும் திருமுறை

மறைக்காட்டார்; வலிவலத்தார்;
வாய்மூர் மேயார்;
வாழ்கொளி புத்தூரார்;
மாகா ளத்தார்;

கறைக்காட்டும் கண்டனார்;
காபா லிய்யார்;
கற்குடியார்; விற்குடியார்;
கானப் பேரார்;

பறைக்குஆட்டும் குழிவிழிகண்
பல்பேய் சூழப்
பழையனூர் ஆலங்காட்டு
அடிகள், பண்டுஒர்

மிறைக்காட்டும் கொடும்காலன்
வீடப் பாய்ந்தார்;
வீழி மிழலையே
மேவி னாரே.

— அப்பர்

21-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

திருவாரூர் திருமூலட்டானம், திருவானைக்கா, திருஆக்கூர் தான்தோன்றிமாடம், திருஆவூர், திருப்பேரூர், திருப்பிரமபுரம், திருப்பேராவூர், திருப்பெருந்துறை, காம்பீலி, பிடவூர், பேணத் தக்க கூர்கொண்ட குறுக்கைவீரட்டம், கோட்டூர், குடமூக்கு, திருக்கோழம்பம், சோலை சூழ்ந்த திருக்கழுக்குன்றம், திருக்கானப்பேர் ஆகிய இத்தலங்களில் எல்லாம் கயிலாயம் மேவிய கடவுளைக் காணலாம்.

விளக்கம்:

மூலட்டானம் திருவாரூர் கோயிலின் பெயர். தான் தோன்றிமாடம் ஆக்கூர்க் கோவிலின் பெயர்.

பாடல் எண். 21

ஆறும் திருமுறை

ஆரூர்மூ லட்டானம்,
ஆனைக் காவும்,
ஆக்கூரில் தான்தோன்றி
மாடம், ஆவூர்,

பேரூர், பிரமபுரம்,
பேரா வூரும்,
பெருந்துறை, காம்பீலி
பிடவூர், பேணும்

கூரார் குறுக்கைவீ -
-ரட்டா னம்மும்,
கோட்டூர், குடமூக்கு,
கோழம் பம்மும்,

காரார் கழுக்குன்றும்,
கானப் பேரும்,
கயிலாய நாதனையே
காண லாமே.

— அப்பர்

## 22-ஆவது பாட்டின் பொருள்

### பொழிப்பு:

தேவர்களுள் உயர்ந்த தேவனே, அமரர் எல்லாம் திருவடிமீது பூத்தூவி, தேடிநின்று, நாப் பொருந்தத் தோத்திரம் பாடி, கூத்தாடி, பிரமனும் இந்திரனும் நாரணனனும் வணங்கி நிற்ப, அடர்ந்த பொழில் சூழ்ந்த கானப்பேர் கோயில் கொண்டாய். திருக்கழுக் குன்றச் சிகரத்தில் தங்கினுய். இறைவனே! உன் மலர் நிறைந்த பொன்னடிகளில் வந்து பொருந்துகின்றேன்; அழகிய திருப்புகலூர்த் தலத்தில் எழுந்தருளியி-ருக்கின்ற புண்ணிய மூர்த்தியே!

### விளக்கம்:

அலர்: பூ. கா பொழில், சோலை: ஒரு பொருள் பன்மொழி. இப்பாடல் அப்பர் அடிகள் வீடு பேறு அடையும்போது திருப்புகலூர்த் தலத்தில் பாடிய பதிகத்தில் உள்ளது.

பாடல் எண். 22

ஆறும் திருமுறை

தேவார்ந்த தேவனே,
தேவர் எல்லாம்
திருவடிமேல் அலர்இட்டுத்
தேடி நின்று,
நாவார்ந்த மறைபாடி,
நட்டம் ஆடி,
நான்முகனும், இந்திரனும்,
மாலும் போற்ற,
காவார்ந்த பொழில்சோலைக்
கானப் பேராய்!
கழுக்குன்றத்து உச்சியாய்!
கடவு ளே!நின்
பூவார்ந்த பொன்அடிக்கே
போது கின்றேன்;
பூம்புகலூர் மேவிய
புண்ணி யன்னே.

— அப்பர்

## 23-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

பாராட்டிச் சொல்லப் பெறுகின்ற சிவபெருமான் புகுந்து உறைகின்ற, பரந்த நன்மை பெருகிய, ஊர்கள் எவை என்னில், அவை எம் பெருமான் உறைகின்ற தென்னூர், ஒழுக்கம் நிறைந்தோர் வாழும் திருச்சுழியல், திருக்கானப்பேர், திருத் தேவனூர், பொன்னூர் நாட்டின்கண் உள்ள பொன்னூர், புரிசை நாட்டைச் சேர்ந்தன புரிசை என்பன ஆம்.

விளக்கம்:

தென்னூர், தேவனூர், பொன்னூர், புரிசை வைப்புத்தலங்கள். கைம்மை: ஒழுக்கம். பன்னுதல்: பலகாலும் பாராட்டுதல். பாய்தல்: பரத்தல்.

பாடல் எண். 23



ஏழாம் திருமுறை

தென்னூர், கைம்மைத் திருச்சுழி-
-யல்,திருக் கானப்பேர்,

பன்னூர் புக்குஉறை யும்,பர-
-மர்க்குஇடம், பாய்நலம்

என்னூர்? எங்கள் பிரான்உறை-
-யும்திருத் தேவனூர்

பொன்னூர் நாட்டுப்பொன் னூர்புரி-
-சைநாட்டுப் புரிசையே.

— சுந்தரர்

24-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

காட்டூரில் எழுந்தருளிய கடல் போன்றவனே! கடம்பூரில் தங்கிய மலைபோன்றவனே! கானப் பேரூர் உறைபவனே! கோட்டூரில் படர்ந்திருக்கும் கொழுந்து போன்றவனே! திரு அழுந்தூரில் மேவிய அரசனே! கொழுநல் என்னும் தலத்தில் பொருந்திய கொல்லுதல் வல்ல சிங்க ஏறு போன்றவனே! பாட்டினுல் பலரும் பரவிப்பாடப் படுபவனே! பனங்காட்டூரில் பொருந்தியவனே! விடைஏறுகின்ற அறக்கடவுளே! நான் எப்பொழும் உன்னை மறவாமல் பாட அருள் செய்வாயாக!

விளக்கம்:

கொழுநல்: ஒருவைப்புத்தலம்.

பாடல் எண். 24

ஏழாம் திருமுறை

காட்டூர்க் கடலே! கடம்பூர்
மலையே! கானப் பேரூராய்!

கோட்டூர்க் கொழுந்தே! அழுந்தூர்
அரசே! கொழுநற் கொல்ஏறே!

பாட்டூர் பலரும் பரவப்
படுவாய், பனங்காட்டு ஊரானே!

மாட்டூர் அறவா? மறவாது
உன்னைப் பாடப் பணியாயே.

— சுந்தரர்

## 25-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

அடியனேன் புனல் சூழ்ந்த வயல் உடைய கானப் பேர்த் தலத்தில் எழுந்தருளியிருகின்ற காளை போன்றவனாகிய கடவுளை, அடியார்கள் விழ்ந்து வணங்கும் திருவடிகளையும், ஒளி மிக்க இளம் திங்களையும், சொற்கேட்டான் காய் போன்ற வடிவமுள்ள மெல்லிய தனத்தையுடைய தேவியைப் பக்கத்தே தாங்கி வரும் தாமரைபுரையும் திருமேனியையும், அமரர்கள் அரற்றக் கடலில் எழுந்த நஞ்சைக் குடித்த நினைவுக்குறி நிற்க, மேகத்தைப்போல் கறுத்துத் தோன்றுகின்ற கழுத்தையும் எட்டுத்தோள்களையும். அழகிய நல்ல சடையின் மீது தோன்றும் அணிகளையும் கண்ணார நான் கண்டு வணங்கும் நாள் எந்த நாளோ?

விளக்கம்:

அடித்தொழலும் என்பதை தொழும் அடி என்று மாற்றுக. சூது: சொற்கேட்டான் ஆடும் காய். பூசல்: ஒலமிடல். கொண்டல்: மேகம்.

பாடல் எண். 25

ஏழாம் திருமுறை

தொண்டர் அடித்தொழலும்
சோதி இளம்பிறையும்
சூதுஅன மென்முலையாள்
பாகமும் ஆகிவரும்

புண்ட ரிகப்பரிசாம்
மேனியும், வானவர்கள்
பூசல் இடக்கடல்நஞ்சு
உண்ட கருத்துஅமரும்

கொண்டல் எனத்திகழும்
கண்டமும், எண்தோளும்,
கோல நறுஞ்சடைமேல்
வண்ணமும், கண்குளிரக்

கண்டு தொழப்பெறுவது
என்றுகொ லோ?அடியேன்
கார்வயல் சூழ்கானப்
பேர்உறை காளையையே.

— சுந்தரர்

26-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு :

அடியேன் புனல் சூழ்ந்த வயல் உடைய கானப் பேர்த்தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற காளை போன்றவனாகிய கடவுளை, குளிர்ச்சி தருகின்ற சடையையும், கொடிய பாம்பையும் பொருந்திய கொக்கிறகையும் குளிர்ந்த சிறந்த ஊமத்தம் பூவையும், பாடி, பொருந்த உனது திருவடிகளை ஓதும் அறிவு பெற்ற தொண்டர்கள் உன் சிறப்புக்கு ஏற்ப, உன்னை நினைந்து உள்ளுருகி, உன்னொடு கலந்து, உன்புகழ் பாடலும், நீ அவரேயாகி அவ்அடியாரோடு அன்பு பெருக நிற்பதைக்கண்டு அடியேன் அழகிய கையில் சிறந்த பூக்களைக் கொண்டு என்பாலுள்ள துன்பம் நீங்கக் காதலித்து வணங்குவது எந்தநாளோ?

விளக்கம் :

கூதல்: குளிர்ச்சி. கோளரவு: கொடியபாம்பு. விரசுதல்: பொருந்துதல்.

பாடல் எண். 26

ஏழாம் திருமுறை

கூதல் இடும்சடையும்,
கோள்அர வும்,விரவும்
கொக்குஇற கும்,குளிர்மா
மத்தமும் ஒத்து,உனதாள்

ஓதல் உணர்ந்து,அடியார்
உன்பெரு மைக்குநினைந்து
உள்உரு காவிரசும்,
ஓசையைப் பாடலும்,நீ

ஆதல் உணர்ந்து,அவரோடு
அன்பு பெருத்துஅடியேன்
அங்கையின் மாமலர்கொண்டு
என்கணது அல்லல்கெடக்

காதல் உறத்தொழுவது
என்றுகொ லோ?அடியேன்
கார்வயல் சூழ்கானப்
பேர்உறை காளையையே.

— சுந்தரர்

## 27-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு :

நீர் சூழ்ந்த வயலுடைய கானப்பேர்த் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற காளை போன்றவனுகிய கடவுளை, என்னுடைய செல்வத்தைப் போல எனக்கு நலத்தைத் தருகின்ற மேலோனை, அவனை அடைதலே நல்ல பதவி என்று அறிவார்களது சொல் நிலையில் நிறைந்திருக்கின்ற சிவ பெருமானை, தேனிற் கலந்த இனிய அமுதத்தை, அந்தத் தேனின் தெளிவிடத்திலுள்ள சுவையை, அமரர்கள் தலைவனை, மலர் சூடி உயர்ந்த தலையையுடையவனை, வானில் தோன்றும் சிறந்த திங்களை, குற்றமற்ற கதிரை, காற்றும், தீயும், நிலனும் ஆகிய, இடுகாட்டில் சிறந்த நடம் பயிலும் பிரான் என்று நான் அடைவது எந்த நாளோ?

விளக்கம் :

மாடு: செல்வம். 'என்னுடை மாடு' என்பதை 'நானுடை மாடு' என்ருர் 'நானுடைத் தவத்தால்' என்று திருமங்கையாழ்வாரும், 'யானுடைக்கற்பு' என்று கம்பநாடரும் கூறுவன காண்க. சோதியன்: கதிரவன். மாருதம்: காற்று. அனல்: நெருப்பு. மண்டலம்: நிலம்.

பாடல் எண். 27

ஏழாம் திருமுறை

நான்உடை மாடுஎனவே
நன்மை தரும்பரனை,
நற்பதம் என்றுஉணர்வார்
சொற்பதம் ஆர்சிவனை,

தேன்இடை இன்அமுதை
மற்றுஅத னில்தெளியை,
தேவர்கள் நாயகனை,
பூஉயர் சென்னியனை,

வான்இடை மாமதியை,
மாசுஅறு சோதியனை,
மாருத மும்,அனலும்,
மண்தல மும்ஆய

கான்இடை மாநடன்என்று
எய்துவது என்றுகொலோ?
கார்வயல் சூழ்கானப்
பேர்உறை காளையையே.

— சுந்தரர்

## 28-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு :

நீர் சூழ்ந்த வயலுடைய கானப்பேர்த்தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற காளை போன்றவனுகிய கடவுளை, பகைவரின் மூன்று ஊர்களை அந்த நாளில் அழித்த வில் தொழிலில் வல்லவராகிய சிவபெருமானின் வீரமும், அவரை எண்ணுவாரது நினைப்பின் வழிநிற்கும் நிலையும், அவர்களை நடத்தும் வழியும். குற்றமற்ற தன் அன்பர் கூறும் புகழின் தன்மையும், இடுப்பில் கட்டு கின்ற கோவணமும் பட்டும் தோலும், வலிமை யுடைய திரண்ட தோளும், மார்பிலே அணிந்த திருநீற்றில் சிறந்த மலைமகளாகிய உமையவள் தழுவியதனல் தோன்றிய வடுவும், நான் பாராட் டிக் கற்ற விதத்தால் பணிந்து கைதொழுவது எந்த நாளோ?

விளக்கம் :

பாவகம்: எண்ணம். கோசிகம்: பட்டு. அதள்: தோல். சுவடு: அடையாளம்.

பாடல் எண். 28

ஏழாம் திருமுறை

செற்றவர் முப்புரம்அன்று
அட்ட சிலைத்தொழிலார்,
சேவக மும்நினைவார்,
பாவக மும்நெறியும்

குற்றம்இல் தன்அடியார்
கூறும் இசைப்பரிசும்,
கோசிக மும்,அரையில்
கோவண மும்,அதளும்,

மல்திகழ் திண்புயமும்,
மார்பிடை நீறு,துதை
மாமலை மங்கைஉமை
சேர்சுவ டும்புகழக்

கற்றன வும்பரவிக்
கைதொழல் என்றுகொலோ!
கார்வயல் சூழ்கானப்
பேர்உறை காளையையே.

— சுந்தரர்

## 29-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

நீர்சூழ்ந்த வயலுடைய கானப் பேர்த்தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற காளைபோன்றவனாகிய கடவுளை, முல்லைக்கு உரிய காளையின் அழகும், எழிலார்ந்த நல்ல சடையில் கொத்துக் கொத்தாகப் பூக்கும் கொன்றைப் பூ மாலையும், அதன் மருங்கே முல்லை மொட்டுப்போன்ற பற்களை யுடைய மெல்லிய தன்மைவாய்ந்த தேவி ஒரு பக்கத்திலே ஆசை மேலிட்டுத் தங்கியிருக்கின்ற கூறான எல்லாத் தன்மைகளும், தில்லை நகரத்திலே சிற்றம்பலத்திலே ஆடிய சிறந்த கூத்தும், திண்மைவாய்ந்த மழுப்படையும், கையின்மீது தோன்றும் சுடர்விட்டு எரியும் நெருப்பும், அடியார்கள் அணிவித்த மணியழுத்திய மாலையின் அழகும் நான் காண்பது என்றைக்கோ ?

**விளக்கம்:**

கொல்லை: முல்லைநிலம். குழகு: அழகு. கல்லவடம்: மணியழுத்திய மாலை.

பாடல் எண். 29

ஏழாம் திருமுறை

கொல்லை விடைக்குழகும்,
கோல நறும்சடையில்
கொத்துஅல ரும்இதழித்
தொத்தும், அதன்அருகே

முல்லை படைத்தநகை
மெல்இய லாள்ஒருபால்
மோக மிகுத்துஇலகும்
கூறுசெய் எப்பரிசும்,

தில்லை நகர்ப்பொதுஉற்று
ஆடிய சீர்நடமும்,
திண்மழு வும்,கைமிசைக்
கூர்எரி யும்,அடியார்

கல்ல வடப்பரிசும்
காணுவது என்றுகொலோ?
கார்வயல் சூழ்கானப்
பேர்உறை காளையையே

— சுந்தரர்

## 30-ஆவது பாட்டின் பொருள்

### பொழிப்பு:

நீர்சூழ்ந்த வயலுடைய கானப் பேர்த்தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற காளை போன்றவனாகிய கடவுளை, தாமரையில் உறையும் திருமகளை ஒத்த பெண்களின் இசைக்குப் பொருந்திய பயன் அமைந்த பாடலின் பெருக்கத்தையும், பத்தியையும், விடுபேறு அளிக்கும் எண்ணத்தக்க முதற் கடவுள் இவன் என்று எழுகின்றவர்களுடைய விருப்பத்தையும்கொண்ட தலைவனும் எம் தந்தையைக் கலந்து பொருந்துதல் எப்படி என்று அணித்தே நின்று வருந்தும் என்னையும் பொருளாகக்கொண்டு நான் கடைத்தேறும் வண்ணம், நெற்றிக் கண் படைத்த கடவுளாகிய கனியை நான் காண்பது எந்த நாளோ?

### விளக்கம்:

பண்: இசை. பங்கயம்: தாமரை. ஏசறவு: விருப்பம். நையுறுதல்: விரும்புதல்.

பாடல் எண். 30

ஏழாம் திருமுறை

பண்ணுத லைப்பயன்ஆர்
பாடலும், நீடுதலும்
பங்கய மாதுஅனையார்
பத்தியும் முத்திஅளித்து,

எண்ணுத லைப்பெருமான்
என்றுஎழு வார்அவர்தம்
ஏசற வும்,இறையாம்
எந்தையை யும்விரவி

நண்ணுத லைப்படுமாறு
எங்ஙனம் என்றுஅயலே
நையுறும் என்னைமதித்து
உய்யும்வ ணம்அருளும்

கண்ணுத லைக்கனியைக்
காண்பதும் என்றுகொலோ?
கார்வயல் சூழ்கானப்
பேர்உறை காளையையே.

— சுந்தரர்

## 31-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு :

நீர் சூழ்ந்த வயலுடைய கானப்பேர்த்தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற காளைபோன்றவனாகிய கடவுளை, யானையை உரித்து அதன் தோலைப் போர்வையாக உடம்பில் அணிந்தவனை, வஞ்சகர் உள்ளத்துச் சிறிதும் மனமாரத் தங்காதவனை, மும்மூர்த்திகளின் வடிவங்களை ஒருங்குகொண்ட மூலமுதற்காரணனை, பெருமூச்சு விடுகின்ற பெரிய காளையைச் செலுத்துபவனை, பொய்யாக அன்றி மனமார உண்மையாகப் பற்றுகின்ற அடியார்க்கு அமுதத்தை, பால், நல்ல நெய், தயிர் முதலிய ஐந்தில் குளிக்கின்ற மேலானவனை எனக்குக் காவலாக அமைந்த தலைவன் என்று நான் பொருந்துவது எந்த நாளோ?

விளக்கம் :

மா: யானை. அதள்: தோல். அங்கம்: உடம்பு. இறை: சிறிது. மூசு: ஒலிக்குறிப்பு. பாவகம்: போலி எண்ணம்.

பாடல் எண். 31

ஏழாம் திருமுறை

மாவை உரித்துஅதள்கொண்டு
அங்கம் அணிந்தவனை,
வஞ்சர் மனத்துஇறையும்
நெஞ்சுஅணு காதவனை,

மூவர் உருத்தனதாம்
மூல முதல்கருவை,
மூசிடு மால்விடையின்
பாகனை, ஆகம்உறப்

பாவகம் இன்றி.மெய்யே
பற்றும் அவர்க்குஅமுதை,
பால்,நறு நெய்,தயிர்ஐந்து
ஆடு பரம்பரனை,

காவல் எனக்குஇறைஎன்று
எய்துவது என்றுகொலோ?
கார்வயல் சூழ்கானப்
பேர்உறை காளையையே

— சுந்தரர்

### 32-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு.

நீர் சூழ்ந்த வயலுடைய கானப்பேர்த் தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற காளை போன்றவனாகிய கடவுளை, அன்பர்கட்கு எளிய ஒளி வடிவானவனை, அந்தணனை, தூய்மையான மறைகளின் பொருளாகிய நீதியை, நெடுங்கடல் நஞ்சைக் குடித்து அதிலும் சாவாது என்றைக்கும் இருக்கின்றவனை, உலகத்தை உண்டாக்கியவனோடு ஒளிமிக்க திருமாலும் அறியமுடியாத தேவனை, அமரர்களுக்கு ஆகமநூல்களை உணர்த்திய முதல்வனை, மேம்பட்ட தம் புகழைப் பலராலும் ஓதப் பெறுபவனை, தேவர்கள் பங்கிற் பொருந்தியிருப்பவனை, அன்புடன் சென்று நான் அடையும் நாள் எந்த நாளோ?

விளக்கம்:

ஊழிபடைத்தவன்: பிரமன். அரி: திருமால். அண்டன்: அமரன். கண்டன்: பங்கிலுள்ளவன்.

பாடல் எண். 32

ஏழாம் திருமுறை

தொண்டர் தமக்குஎளிய
சோதியை, வேதியனை,
தூய மறைப்பொருளாம்
நீதியை, வார்கடல்நஞ்சு

உண்டுஅ தனுக்குஇறைவாது
என்றும் இருந்தவனை,
ஊழி படைத்தவனோடு
ஒள்அரி யும்உணரா

அண்டனை, அண்டர்தமக்கு
ஆகம நூல்மொழியும்
ஆதியை, மேதகுசீர்
ஓதியை, வானவர்தம்

கண்டனை, அன்பொடுசென்று
எய்துவது என்றுகொலோ?
கார்வயல் சூழ்கானப்
பேர்உறை காளையையே.

— சுந்தரர்

## 33-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

நீர்சூழ்ந்த வயலுடைய கானப்பேர்த்தலத்தில் எழுந்தருளியிருக்கின்ற காளைபோன்றவனாகிய கடவுளை, தலைவனை, நாதம் நிறைந்த ஓசையான வனை, அறிவு விளக்கின் ஒளியாகிய உடம்புக்கு உயிராக இருப்பவனை, பயிரானவனை, பெண்ணை ஒரு பங்கிலே உடையவனை, மேன்மைபொருந்திய தன் அடியார் உள்ளத்தில் சிறிதும் பற்று நீங்காதவனை, குற்றமற்ற கொள்கையையுடைய வனை, என் தூதனை, என்னை ஆள்கின்ற தோழனை, என் தலைவனை, தொங்குகின்ற மீன் வடிவமான காது அணியையும் தோட்டையும் அணிந்த அழகிய காதை உடையவனை, நாய் அனைய சிறியேன் அடைவது எந்த நாளோ?

விளக்கம்:

நாதம்: நுண்ணிய எழுத்தோசை. ஓசை: இசை ஓசை.

பாடல் எண். 33

ஏழாம் திருமுறை

நாதனை, நாதமிகுத்து
ஓசையது ஆனவனை,
ஞான விளக்குஒளியாம்
ஊன்உயி ரை.பயிரை,

மாதனை, மேதகுதன்
பத்தர் மனத்துஇறையும்
பற்றுவி டாதவனை,
குற்றம்இல் கொள்கையனை,

தூதனை, என்தனைஆள்
தோழனை, நாயகனை,
தாழ்மக ரக்குழையும்,
தோடும் அணிந்ததிருக்

காதனை, நாயடியேன்
எய்துவது என்றுகொலோ?
கார்வயல் சூழ்கானப்
பேர்ஊர் கானையையே.

— சுந்தரர்

## 34-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

கரும்பு போன்றவனை, இனிய அமுதத்தை ஒப்பானை, நீர்வயல் நிறைந்தகானப்பேர்த்தலத்தில் எழுந்தருளிய காளை வடிவினனை, ஒளிமிக்க, சிறந்த குளிர்ந்த தமிழ்ப்பாவால் உள்ளத்து எண்ணி, சோர்வின்றி, மனம் உருகி, பணியும், ஒளியார் சோலை சூழ்ந்த நாவலர்களின் மன்னனாகிய ஆரூரன் என்னும் சுந்தரன் சொல்லிய இசைப்பா வாகிய இப்பத்தையும் பாடவல்லார், அடியார்க் குரிய இயல்பினராய், எல்லாத் திக்கும்புகழ நிலை பெற்று இருப்பார்கள். அமரர் உலகத்தினின்றும் மண்ணுலகத்திற்கு இறங்கித் திரும்பப் பிறந்தி டினும் மண்ணுலகத்திற்குத் தலைவராய் வாழ்வது உறுதி.

விளக்கம்:

கன்னல்: கரும்பு. கிளவி:சொல். மன்னி: நிலை பெற்று. இழிதல்: இறங்குதல். தலம்: உலகம்.

பாடல் எண். 34

ஏழாம் திருமுறை

கன்னலே, இன்அமுதை,
கார்வயல் சூழ்கானப்
பேர்உறை காளையை,ஒண்
சீர்உறை தண்தமிழால்

உன்னி, மனத்துஅயரா
உள்உரு கிப்பரவும்
ஒண்பொழில் நாவலர்கோன்
ஆகிய ஆரூரன்,

பன்னும் இசைக்கிளவி
பத்துஇவை பாடவல்லார்,
பத்தர் குணத்தினராய்
எத்திசை யும்புகழ

மன்னி இருப்பவர்கள்;
வானின் இழிந்திடினும்
மண்தல நாயகராய்
வாழ்வது நிச்சயமே.

— சுந்தரர்

## 35-ஆவது பாட்டின் பொருள்

**பொழிப்பு:**

அன்பின் பண்பு ஒருருக் கொண்டது போன்றவன்; பிளந்த வாரினால் மூடப்பட்ட கருநிறம் வாய்ந்த செருப்பினை அணிந்தவன்; இரத்தம் காயாத உடைவாள் படையை இடையில் கட்டிய தோல் கச்சையை அணிந்தவன்; தோலால் ஆகிய நீண்ட பையில் குட்டை மயிர்களைத் திணித்து, வாரினால் கட்டப்பட்ட கோடுகள் அமைந்த கைக்கட்டியை உடையவன்; புலியின் வளைந்த நகத்தையும் பன்றியின் வெள்ளிய பல்லையையும் மாறி மாறித் தொடுக்கப்பெற்ற மாலையை மேலாடைபோல் அணிந்தவன்; நீலநிறம் வாய்ந்த மயிற்பீலியை நெற்றியிற் சுற்றி, குடுமிக்காட்டில் சோழியை முடித்தவன்.

**விளக்கம்:**

பரிவு: அன்பு. போழ்தல்: பிளத்தல். காழகம்: கறுப்பு நிறம். குருதி: இரத்தம். சுரிகைஃகம்: உடையில் செருகும் வாள்படை. கைக்கட்டி: கையில் அணியும் அணி. உழுவை: புலி. கூன்: வளைதல். உகிர்: நகம். கேழல்: பன்றி கானக்குஞ்சி: காடு போன்ற சிகை. கவடி: சோழி.

பாடல் எண். 35

பதினெராம் திருமுறை
(திருக்கண்ணப்ப தேவர் திருமறம்)

பரிவின் தன்மை உருவுகொண்டு அனையவன்;
போழ்வார் போர்த்த காழகச் செருப்பினன்;
குருதி புலராச் சுரிகை எஃகம்,
அரையில் கட்டிய உடைதோல் கச்சையன்;
தோல்நெடும் பையில் குறுமயிர் திணித்து, 5

வாரில் வீக்கிய வரிக்கைக் கட்டியன்;
உழுவை கூன்உகிர் கேழல்வெண் மருப்பு
மாறுபடத் தொடுத்த மாலைஉத் தரியன்;
நீலப் பீலி நெற்றி சூழ்ந்த
கானக் குஞ்சிக் கவடி புல்லினன்; 10

(அடுத்த பக்கம்)

## 35-ஆவது பாட்டின் பொருள் (தொடர்ச்சி)

பொழிப்பு:

மிக்க நாற்றத்தையுடைய குடிலை உடம்பாக உடையவன்; புலியை வென்று வெற்றிமாலை சூடிய சிவபெருமானின் இனத்தைச் சேர்ந்த தலைவன்; சிறந்த வில்லையும் கணையையும் நல்லன வாகத் தாங்கிப் பிடித்து, கல் மலிந்த காட்டில் காற்றைப் போல் ஓடி, அம்பினால் பன்றியைக் கொன்று, அறுத்து, அத் தசையைக் குச்சியில் கோத்துக் கொழுகொழுத்த நெருப்பிலே வாட்டி, தன் நாவில் வைத்து, சுவைத்துப் பார்த்த உணவும், தன் தலையிலே அணிந்துகொண்டு வந்த குளிர்ந்த மாலையும், தன் வாயாகிய பாத்தி ரத்தில் கொண்டு வந்த அபிடேக நீரும்,

விளக்கம்:

குடில்: இருக்கை. யாக்கை: உடம்பு. வேங்கை: புலி. வாகை: வெற்றிமாலை. சங்கரன்: சிவன். பார்த்தன் தவத்தில் சிவன் வேட்டுவனாக வந்தான் ஆதலின் சங்கரனைத் தன் இனத்தவன் என்றார். கருமா: பன்றி. போனகம்: உணவு. மஞ்சனம்: அபிடேகம்.

பாடல் எண். 35 (தொடர்ச்சி)

பதினொராம் திருமுறை

முடுகு நாறு குடிலே யாக்கையன்;
வேங்கை வென்று வாகை சூடிய
சங்கரான் தன்இனத் தலைவன்; ஓங்கிய
வில்லும், அம்பும் நல்லனதாங்கி
ஏற்று, கல்வனம் காற்றில் இயங்கி, 15

கணையில் வீழ்த்துக் கருமா அறுத்துக்
கோலின் ஏற்றிக் கொழுந்தீக் காய்ச்சி,
நாவில் வைத்த நாள்போ னகமும்,
தன்தலைச் செருகிய தண்பள்ளித்தாமமும்,
வாய்க் கலசத்து மஞ்சன நீரும், 20

(அடுத்த பக்கம்)

## 35-ஆவது பாட்டின் பொருள் (தொடர்ச்சி)

பொழிப்பு :

கொண்டு, திருக்கானப்பேரில் தங்கியிருக்கின்ற நெற்றிக்கண் பெற்ற கடவுளுடைய தலையிலுள்ள அலங்காரத்தைத் தன் திருவடியால் தள்ளி, நீங்காத குணத்தை உடைய சிவகோசரியார் என்னும் அருச்சகருக்கு அந்நாளில் அவன் (கண்ணப்பன்)அன்பைப் புலப்படுத்த, மூன்றுகண் பெற்ற தந்தைக்கு ஒரு கண்ணில் நொடிப் பொழுதில் குருதி கொட்ட, அந்தக் கணத்திலே, அழுது, விழுந்து, தொழுது, எழுந்து, ஓலமிட்டு, அற்ப மருந்துகளைப் போடுவதால் இந்நோய் நீங்காது என்று கருதி, தன்னையே மருந்தாக்கித் தன் பூப் போன்ற கண்ணைப் பிடுங்கிக் குருதிக் கண்ணில் பொருத்த, நின்றது இரத்தம். இன்னொரு ஒளி மிக்க அழகிய கண்ணும்,

விளக்கம் :

கோசரி: சிவகோசரியார். நேசம்: அன்பு. உதிரம்: இரத்தம். இழிதர: கொட்ட.

பதினொராம் திருமுறை

கொண்டு, கானப் பேர்உறை கண்ணுதல்
முடியில் பூசை அடியால் நீக்கி,
நீங்காக் குணத்துக்
கோசரிக்கு அன்றுஅவன் நேசம் காட்ட,
முக்கண் அப்பனுக்கு ஒருகணில் உதிரம் 25

தக்கி ணத்திடை இழிதர, அக்கணம்
அழுது, விழுந்து, தொழுது,எழுந்து ஆற்றி,
புன்மருந்து ஆற்றப் போகாது என்று,
தன்னை மருந்துஎன்று மலர்க்கண் அப்ப,
ஒழிந்தது; மற்றை ஒண்திரு நயனம், 30

(அடுத்த பக்கம்)

35-ஆவது பாட்டின் பொருள் (தொடர்ச்சி)

பொழிப்பு:

கொட்டிய (இரத்தம்) கண்ணிர்ப் பெருக்கால் பொங்கி வழிய, 'அக்கண்ணும் போய்விட்டதே' எனத் தன் இன்னொரு கண்ணையும் அம்பின் நுனியால் தோண்ட, ஆண்தகையாகிய சிவ பெருமான் தன்னுடைய ஒரு கையால் கண்ணப்ப னுடைய இரண்டு கைகளையும் பிடித்து, விரைந்து 'நம் புண் நீங்கிவிட்டது; இதனை நீ காண்பாயாக! 'நீ நல்லவன்; நல்லவன்' எனக் கடவுளால் பாராட்டப்பெறும் திருவேட்டுவராகிய கண்ணப் பரின் திருவடியைக் கைகுவித்து வணங்க, பிறவியை விரும்பி உழல்கின்ற வினைச் செயல் நீங்கும்.

விளக்கம்:

பகழி: அம்பு. அகழ்தல்: தோண்டுதல். ஒல்லை: விரைவு: கண்ணப்பர் திருவடியை வணங்கினால் பிறவிப்பெருங்கடல் நீந்தலாம், என்பது கருத்து. காளத்திக் கடவுளை வணங்கிய திருஞானசம்பந்தப் பெருமான், கண்ணப்பரைத் தொழுவதே கடவுளைக் கும்பிட்ட பயன் என்று கருதினார்.

பாடல் எண். 35 (தொடர்ச்சி)

பதினொராம் திருமுறை

பொழிந்த கண்ணீர்க் கலுழி பொங்க,
அற்றது என்று, மற்றைக் கண்ணையும்
பகழித் தலையால் அகழ, ஆண்தகை
ஒருகை யாலும் இருகை பிடித்து,

ஒல்லை "நம்புண் ஒழிந்தது" பாராய்!
"நல்லை! நல்லை!!" எனப்பெறும்
திருவேட் டுவர்தம் திருவடி கைதொழக்
கருவேட்டு உழல்வினைக் காரியம் கெடுமே. 38

— கல்லாடதேவர்.

## 36-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

முல்லை நிலத்தின் நலம் பொருந்திய திருக்கானப் பேர்த் தலத்தில் உறையும் மூன்று கண் படைத்த வன் என்று சொல்லுவாள்; கங்கையாளின் இன்பத் தைத் துய்க்கின்ற அடர்ந்த சடையையுடையான் என்று இயம்புவாள்; முலைநலம் பெற்ற பெண் ணனவள். "ஏ! வா!" என (அவன் அணிந்த) நிறைந்த கொன்றை மாலையை வாய் நிறையப் பாடி, தேவாதி தேவனே! வளைகளைக் கழல விடுவாள்.

விளக்கம்:

இது தாயார் கூற்றாக வரும் துறைப்பாடல். முதல் 'முலை' முல்லையின் இடைக்குறை. முல்லை: காடும் காடு சார்ந்த இடமும். இரண்டாவது 'முலை' ஆகு பெயராக முலையையுடைய கங்கை யைக் குறிக்கும். மூன்றாவது 'முலை' தன் மகளின் சிறப்பை உணர்த்தும்.

பாடல் எண். 36

பதினொராம் திருமுறை (சிவபெருமான் திருஅந்தாதி)

முலைநலம்சேர் கானப்பேர்
முக்கணான் என்னும்;

முலைநலம்சேர் மொய்சடையான்
என்னும்; —முலைநலம்சேர்

மாது. "ஏ!வா!" என்று
வளர்கொன்றை வாய்சோர

மாதேவா! சோரல் வளை.

— கபிலதேவர்

## 37-ஆவது பாட்டின் பொருள்

### பொழிப்பு:

நிலைபெற்று, இந்த உலகம் முழுதும் நீவிரே நிறைந்து நின்றீர்! நிலைத்த இவ்வுலக முழுதும் நீரேயாவிர்! நிலைத்த, குளிர்ந்த (சடை) காட்டிலே பெரிதும் பிளந்து செல்கின்ற கங்கையை அணிந்தீர்! எலும்பு பூண்டீர்! திருக்கானப்பேர்த் தலத்தில் தங்கினீர்! கங்கையென்னும் பெண்ணை உடையீர்!

### விளக்கம்:

ஈரம் : குளிர்ச்சி. கானம் : சடைக் காடு. பேர். பெரிய. ஈர்அக்கங்கை : பிளந்து ஓடும் அக் கங்கை நதி. கங்காளம் : எலும்பு.

பாடல் எண். 37

பதினொராம் திருமுறை (சிவபெருமான் திருஅந்தாதி)

நிலத்துஇவ் உலகுஅனைத்தும்
நீரேயாய் நின்றீர்?

நிலத்துஇவ் உலகுஅனைத்தும்
நீரே? — நிலத்துஈர்அக்

கானப்பே ரீர்!கங்கை
சூடினீர்; கங்காளீர்!

கானப்பே ரீர்!கங்கை யீர்!

— பரணதேவர்

38-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

அவ்விடத்து (திருஇராமேச்சுரத்து) தங்கி, நெற்றிக்கண் படைத்த கடவுளின் திருவடியைத் தலையில் தாங்கி, அவ்விடத்தை விட்டு அகன்று, தமிழ் பொங்கும் அழகிய நாட்டிலுள்ள, அணித்தே வயல் சூழ்ந்த திருநெல்வேலி, சிவந்த கண்ணுடைய இடபத்தை உந்தும் சிவபெருமான் நிலைத்து நிற்கின்ற திருக்கானப்பேர் முதலாய எங்கும் புகழ் விளங்கும் தலங்கள் எல்லாம் சென்று கும்பிட்டார். (திருநாவுக்கரசர்)

விளக்கம் :

மன்னுதல் : நிலைபெறுதல். தானம் : இடம். அப்பர் சுவாமிகள் நெல்வேலி சென்றார் என்று சேக்கிழார் கூறுவர். ஆனால் நெல்வேலிக்கு அப்பர் தேவாரம் கிடைத்திலது. கானப்பேர்த் தலத்திற்கும் அப்பரின் தனிப் பதிகம் இல்லை.

பாடல் எண். 38

பன்னிரண்டாம் திருமுறை
(திருநாவுக்கரசு நாயனார் புராணம்)

அங்குஉறைந்து கண்நுதலார்
அடிசூடி, அகன்றுபோய்ப்

பொங்குதமிழ்த் திருநாட்டுப்
புறம்பணைசூழ் நெல்வேலி,

செங்கண்விடை யார்மன்னும்
திருக்கானப் பேர்,முதலா

எங்கும்நிகழ் தானங்கள்
எல்லாம்புக்கு இறைஞ்சுவார்.

— சேக்கிழார்

## 39-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு :

மாற்றாரின் முப்புரங்களை மலை வில்லால் அழித்த மேலான கடவுள் தங்கியிருக்கின்ற திருப்புத்தூர்த் தலத்தை வணங்கி வந்து, புற்றில் தங்கியிருக்கின்ற பாம்புகளை அணிந்த தூய்மையான கடவுள் வாழும் திருப்பூவணத்தைக் சென்று கும்பிட்டு, அங்கு தேவாரம் பாடி, கற்றவர்கள் பரவிப் பணியும் கானப்பேர்த்தலத்தைக் கைகுவித்துக் கும்பிட்டு, அங்கு தேவாரம் பாடி, திருச்சுழியல் வணங்கி, திருக்குற்றாலத்தையும் அங்குள்ள திருக்குறும்பலாவையும் வணங்கி, காலனை உதைத்த கடவுள் தங்கியிருக்கும் திருநெல் வேலியை அடைந்தார். (திருஞானசம்பந்தர்)

விளக்கம் :

பற்றார் : பகைவர். மலைச்சிலை : மலையாகிய வில். புற்றுறும் பணி : புற்றில்வாழ் அரவு.

பாடல் எண். 39

பன்னிரண்டாம் திருமுறை

(திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர் புராணம்)

பற்றுர்தம் புரங்கள்மலைச்
சிலையால் செற்ற
பரமனுர் திருப்புத்தூர்
பணிந்து போந்து,

புற்றுரும் பணிபூண்ட
புனித னுர்தம்
பூவணத்தைப் புக்குஇறைஞ்சிப்
புகழ்ந்து பாடி,

கற்றுர்கள் தொழுதுஏத்தும்
கானப் பேரும்
கைதொழுது, தமிழ்பாடி,
சுழியல் போற்றி,

குற்றுலம், குறும்பலாக்
கும்பிட்டு, ஏத்திக்
கூற்றுஉ தைத்தார்
நெல்வேலி குறுகினுரே.

— சேக்கிழார்

## 40-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

சிவபெருமானை வணங்கி (திருச்சுழியலில்) தங்கியிருந்த சுந்தரமூர்த்திகளுக்கு, அந்த ஊரில், இரவில் கனவிலே காளை வடிவு கொண்டு, கையில் தங்கச் செண்டும், முடியில் உச்சிக் கொண்டையும் தோன்ற, எங்கும் இல்லாத அழகிய வேடத்தை, என்பு உருகுமாறு முன்னே காட்டி,

விளக்கம்:

இப்பாடல் குளகம். அங்கணர்: சிவபெருமான். ஆரூரர்: சுந்தரர். அவ்வூர்: திருச்சுழியல். கங்குல்: இரவு.

பாடல் எண். 40

பன்னிரண்டாம் திருமுறை

(சேரமான் பெருமாள் நாயனுர் புராணம்)

அங்கணரைப் பணிந்துஉறையும்
ஆரூரர்க்கு, அவ்வூரில்,

கங்குலிடைக் கனவின்கண்,
காளையாம் திருவடிவால்

செங்கையினில் பொற்செண்டும்,
திருமுடியில் சுழியமுடன்

எங்கும்இலாத் திருவேடம்
என்புஉருக முன்காட்டி,

— சேக்கிழார்

41-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

"யாம் தங்கியிருப்பது கானப்பேர்" என்று கூறி, கங்கை என்ற வானின் பெரிய ஆறு தங்கிய சிறந்த சடையையுடைய சிவபெருமான் செல்ல, பேரறிவாளராகிய சுந்தரர் அச்செயலை உணர்ந்து, வியந்து, பாம்புடன் கூடப் பன்றியின் பெரிய பற்களை அணிந்து கொண்ட சிவபெருமானின் கருணை இருந்தவாறு இது என்று கூறினர்.

விளக்கம்:

ஞானப்பேராளர்: சுந்தரர். நாகம்: பாம்பு. ஏனம்: பன்றி. எயிறு: பல்.

பாடல் எண் 41

பன்னிரண்டாம் திருமுறை

(சேரமான் பெருமாள் நாயனுர் புராணம்)

"கானப்பேர் யாம்இருப்பது"
எனக்கழறிக் கங்கைஎனும்

வானப்பேர் ஆறுஉலவும்
மாமுடியார் தாம்அகல,

ஞானப்பே ராளர்உணர்ந்து,
அதிசயித்து, நாகமுடன்

ஏனப்பேர் எயிறுஅணிந்தார்
அருள்இருந்த பரிசுஎன்பார்.

— சேக்கிழார்

42-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

கண்டு அருளிய விதத்தை, சேரமான் பெரு-மாளுக்குச் சொல்லி அருளி,தாமரைப் பொய்கை சூழ்ந்த திருச்சுழியலில் எழுந்தருளியிருக்கின்ற தூயவர் திருவடியைக் கும்பிட்டு, மகாதேவன் வாழ்கின்ற திருக்கானப்பேர்த்தலத்தை, அடையக் கருதிய சுந்தரமூர்த்திகள், 'தொண்டரடித் தொழலும்' என்று தொடங்கும் தேவாரப்பதிக மாலையைச் சூட்டுவார்.

விளக்கம்:

கழறிற்றறிவார்: சேரமான் பெருமாள் நாயனார். புண்டரிகம்: தாமரை. அண்டர்பிரான்: தேவர்கள் தலைவன்; மகாதேவன்.

பாடல் எண். 42

பன்னிரண்டாம் திருமுறை

(சேரமான் பெருமாள் நாயனார் புராணம்)

கண்டுஅருளும் படிகழறிற்று
அறிவார்க்கு மொழிந்துஅருளிப்

புண்டரிகப் புனல்சுழியல்
புனிதர்கழல் வணங்கிப்போய்,

அண்டர்பிரான் திருக்கானப்-
-பேர்அணவார் ஆரூரர்,

'தொண்டர்அடித் தொழலும்'எனும்
சொற்பதிகத் தொடைபுனைவார்.

— சேக்கிழார்

## 43-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

'காளை ஈசரைக் கண்டு வணங்குவது என்று?' என, தம் திருவடியை நாள்தோறும் கும்பிடத் தருகின்ற கடவுள்பால் செல்கின்றார், மக்களைச் சேய்மையில் கண்டவுடன் அச்சம் மிகுந்த நீர் வாழ்நாயின் பக்கத்திலே வாளைமீன் தாவுகின்ற சதுப்பு நிலத்தொடு கூடிய வயல் சூழ்ந்த திருமுனைப்பாடி வளநாடராகிய சுந்தரர்.

விளக்கம்:

காளையார்: கானப்பேர்க்கடவுளின் பெயர். ஆள்: மனிதன். நீர்நாய்: நீரில் உறையும் நாய். வாளை: ஒருவகை மீன்.

பாடல் எண். 43

பன்னிரண்டாம் திருமுறை

(சேரமான் பெருமாள் நாயனுர் புராணம்)

காளையார் தமைக்கண்டு
தொழப்பெறுவது என்றென்று

தாளைநா ளும்பரவத்
தருவார்பால் சார்கின்ருர்,

ஆளைநீள் இடைக்காண
அஞ்சிய,நீர் நாய்அயலே

வாளைபாய் நுழைப்பழனம்,
முளைப்பாடி வளநாடர்.

— சேக்கிழார்

44-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

நிலைபெற்ற திருக்கானப்பேர் என்னும் வளமான தலத்தை வந்தடைந்து, சடையில் வளரும் திங்களை அணிந்த கடவுளின் செழுமையான கோயிலை வலம் வந்து, இறைவன் திருமுன் வணங்கி, உள்ளே புகுந்து, முழுமுதற்கடவுளின் செவ்விய திருவடியிலே வீழ்ந்து, பாராட்டிச் சொல்லத்தக்க செழுந்தமிழ்த்தேவாரப் பாக்களைப் பாடிக் கும்பிட்டார். (சுந்தரர்)

விளக்கம்:

மன்னுதல்: நிலைபெறுதல். வளர்மதி: வளரும் சந்திரன். பன்னுதல்: பாராட்டிச் சொல்லுதல்.

பாடல் எண். 44

பன்னிரண்டாம் திருமுறை

(சேரமான் பெருமாள் நாயனுர் புராணம்)

மன்னுதிருக் கானப்பேர்
வளம்பதியில் வந்துஎய்திச்

சென்னிவளர் மதிஅணிந்தார்
செழும்கோயில் வலம்கொண்டு,

முன்இறைஞ்சி, உள்அணைந்து,
முதல்வர்சே வடிதாழ்ந்து,

பன்னுசெழும் தமிழ்மாலே
பாடினர்; பரவினர்.

— சேக்கிழார்

45-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

நிறைந்த அன்புடன் அந்தக் கானப்பேர்த் தலத்தை வணங்கிப் பரவி, புகழ்நிறைந்த திருத் தொண்டராகிய சுந்தரமூர்த்திகள், சில நாட்கள் அத்தலத்தில் தங்கியிருந்து, புயல் தவழ்கின்ற பூஞ்சோலையைக் கொண்ட கானப்பேர்த்தலத்தை விட்டு, போர் செய்ய வல்ல காளையையுடையா ராகிய கைலை மலையார் உறைகின்ற திருப்புனவாயில் என்னும் தலத்தை அடைந்தார்.

விளக்கம் :

கார்: மேகம். ஆன் ஏறு: காளை. திருப்புனவாயில் கடலுக்கு அணித்தேயுள்ள பாண்டிபதினான்கு தலங்களில் ஒன்று.

பாடல் எண். 45

பன்னிரண்டாம் திருமுறை

(சேரமான் பெருமாள் நாயனுர் புராணம்)

ஆராத காதலுடன்
அப்பதியில் பணிந்துஏத்திச்

சீர்ஆரும் திருத்தொண்டர்
சிலநாள்அங்கு அமர்ந்துஅருளி,

காராரும் மலர்ச்சோலைக்
கானப்பேர் கடந்து,அணைந்தார்,

போர்ஆன்ஏற் றுர்கயிலைப்
பொருப்பர்திருப் புனவாயில்.

— சேக்கிழார்

46-ஆவது பாட்டின் பொருள்

இவ்வனைத்தும் தலங்களின் பெயர். இதில் இருபத்து ஏழு தலங்களின் பெயர்கள் வருகின்றன. இதில் கானப்பேர்த்தலம் சொல்லப்பட்டிருக்கிறது.

பாடல் எண். 46

திருப்பதிகக்கோவை

குருகாவூர், திருவேள்விக்-
குடி,விசய மங்கை,
குற்ருலம், குடமூக்கு,
கோட்டாறு, பனையூர்,

கருகாவூர், குரங்காடு-
-துறை,ஓமாம் புலியூர்,
கண்டியூர், வேதிகுடி,
கானூர்,கோ கரணம்,

திருவாரூர் அரநெறி,பந்-
-தணைநல்லூர், நல்லம்,
திருக்கொண்டீச் சரம்,தேவூர்,
திருச்சிராப் பள்ளி,

பெருவேளூர், கீழ்வேளூர்,
எறும்பியூர், கானப்
பேர்,திருமங் கலக்குடி,ஆக்-
-கூர்,கோவ லூரே.

— உமாபதி சிவாசாரியார்

47-ஆவது பாட்டின் பொருள்

இப்பாடலில் திருக்கானப்பேர் உள்ளிட்ட பாண்டி நாட்டுத் தலங்கள் பதினன்கும், மலை நாட்டிலுள்ள ஒரே தேவாரத்தலமான திருஅஞ்சைக்களமும், கொங்கு நாட்டுத்தலங்கள் ஏழனுள் நான்கும் சொல்லப்பெற்றிருக்கின்றன.

பாடல் எண். 47

திருப்பதிக்கோவை

ஆலவாய், ஆப்பனூர்,
பரங்குன்று, ஏ டகத்தோடு,
அரும்கொடுங்குன் றம்,திருப்புத்
-தூர்,புனவா யிலினேடு

ஏலும்இரா மேச்சுரம்.ஆ-
-டானே,கா னப்பேர்,
எழில்திருப்பூ வணம்,சுழியல்,
இன்புறுகுற் ருலம்,

பாலலோ சனன்திருநெல்-
-வேலியொடு பாண்டி
பதினுன்கு, மலைநாட்டில்
அஞ்சைக்க ளம்ஒன்றே,

சீலமிகும் அவிநாசி,
திருமுருகன் பூண்டி,
திருநணு, கொடிமாடச்
செங்குன்றூர் தானே.

— உமாபதி சிவாச்சாரியார்

## 48-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

உறுதியாக மறை பாராட்டுகின்ற திருப்புனவாயில் தலமும், தவயோகி வடிவில் வந்த சிவபிரான் இரச வாதம் செய்து (தாழ்ந்த உலோகங்களை எல்லாம் தங்கமாக்கி) கடவுள் வடிவத்தை வடித்தெடுத்த திருப்பூவணமும், வரம் கொடுப்பவனாகி சிவபிரான் தங்கியிருக்கிற திருக்கானப்பேரும், மலையரையன் பொற்பாவையை விரதயோக வழியிலே நின்று, சிவபிரான் திருமணம் புணர்ந்த திருச்சுழியல் என்னும் பெரிய நகரமும்.

விளக்கம்:

இப்பாடல் குளகம். சரதம்: உறுதிப்பாடு. இப்பாடலில் பாண்டிநாட்டு தேவாரத்தலங்கள் பதினான்கில் திருப்புனவாயில், திருப்பூவணம், திருக்கானப்பேர், திருச்சுழியல் ஆகிய நான்கு தலங்கள் சொல்லப்பெற்றிருக்கின்றன.

பாடல் எண். 48

திருவிளையாடல் புராணம்

சாத வேதம் பரவுபுன -
- வாயில் நகரும், தவசித்தர்

இரத வாதம் செய்துசிவன்
உருவம் கண்ட எழில்நகரும்,

வரதன் ஆகி அரன்உறையும்
கானப் பேரும், மலைமகளை

விரத யோக நெறிநின்று
மணந்தார் சுழியல் வியன்நகரும்,

— பரஞ்சோதி முனிவர்.

## 49-ஆவது பாட்டின் பொருள்

**பொழிப்பு :**

அன்னத்துக்கு இணை என்று சொல்லத்தக்க நடையையுடைய மகளிரது ஆசைக்கு இலக்காகி, சீ,சீ இன்னும் எனது உயிரை அழித்துக் கொள்ளுதல் அழகாகுமா?

உன்னைப்பாடிப் பேறு அடையும் ஒருவரத்தை எனக்கு அருளமாட்டாயா?

மகிழ்ச்சியடையுமாறு தேவர்களைச் சிறையி-னின்றும் நீக்குமாறு அருள் செய்த வேலாயுதத்தை உடையவனே!

ஆயர்பாடியில் அலைந்துதிரிந்த திருமாலின் அழகிய மருமகனே!

மேகத்தைக்கண்டு ஆசைப்பட்டு, தோகையை விரித்து ஆடும் நல்ல மயிலை உடையவனே!

தினைப்புனத்தைக் காவல் செய்ய உரிய பெண்ணின் மனத்துக்கு இசைந்த மாப்பிள்ளையே!

திருக்கானப்பேர் என்னும் தலத்தினில் இனிதே தங்கியிருக்கும் பெருமாளே!

**விளக்கம்:**

அனம்: அன்னத்தின் இடைக்குறை. மடவியர்: மகளிர். அநுராகம்: ஆசை. உவப்பு: மகிழ்ச்சி. அயில்: வேல். அரி: திருமால். முகில்: மேகம். நத்தா: விரும்பி. கலபம்: தோகை. தினைக்காவற் குரியவள்: வள்ளி.

பாடல் எண். 49

திருப்புகழ்

அனத்தோடு ஒப்பாம் எனுநடை
மடவியர் அநுராகம்,
அதற்கே சிச்சீ இனமெனது
உயிர்கெடல் அழகாமோ?

உனைப்பா டிப்பே றுறும்ஒரு
வரம்இனி உதவாயோ?
உவப்பா கத்தே வர்கள்சிறை
விடவிடும் அயிலோனே!

முனைப்பா டிக்கே திரிதரும்
அரிதிரு மருகோனே!
முகிற்கே நத்தா விரிதரு
கலபநன் மயிலோனே!

தினைக்கா வற்கே உரியவள்
மனமகிழ் மணவாளா!
திருக்கா னப்பேர் நகர்தனில்
இனிதுறை பெருமாளே.

—அருணகிரிநாதர்.

## 50-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

அழகிய காதில் அணிந்த குழையினால், கோதிவிட்டு முடிக்கப்பெற்ற கரிய கூந்தலால், உலகத்தவரை யெல்லாம் துன்புறுத்தும் பெண்களிடத்தில் ஆசை வைக்கலாமோ?

மேலான அமரர்கட்கு அருமையானவனே!

வீரமான சேவலைக் கொடியில் தீட்டியவனே!

எமனுடைய பாசம் அணுகும் துயரத்தைத் தீர்ப்பாயாக!

கானப்பேர்த் தலத்தில் உறைகின்ற பெருமாளே!

விளக்கம்:

கோலம்: அழகு. குழை: காதணி. மை: கறுப்பு. குழல்: கூந்தல். நாரி: பெண். காலப்பாசம்: எமனுடைய பாசக்கயிறு.

பாடல் எண். 50

திருப்புகழ்

கோலக் காதில் குழையாலே,
கோதிச் சேர்மைக் குழலாலே,

ஞாலத் தாரைத் துயரேசெய்
நாரிக்கு ஆசைப் படலாமோ?

மேலைத் தேவர்க்கு அரியோனே?
வீரச் சேவற் கொடியோனே!

காலப் பாசத் துயர்தீராய்!
கானப் பேரிற் பெருமாளே!

— அருணகிரிநாதர்

51-ஆவது பாட்டின் பொருள்

பொழிப்பு:

இப்பாடல் பாண்டி பதினான்கு தலங்களையும் குறிக்கும் ஓர் வெண்பா.

விளக்கம்:

கூடல்: மதுரை. கானை: காளையார் கோயில். கொடுங்குன்றம்: பிரான்மலை.

பாடல் எண். 51

பாண்டி பதினான்கு

கூடல், புனவாயில்,
குற்றாலம், ஆப்பனூர்,

ஏடகம், நெல்வேலி,
இராமேசம்; — ஆடானை,

தென்பரம்குன் றம்,சுழியல்,
தென்திருப்புத் தூர்,கானை,

வன்கொடுங்குன் றம்,பூ வணம்.

52-ஆவது பாட்டின் பொருள்

இப்பாடலிலும் பாண்டி பதினாலு தேவாரத்தலங்கள் கூறப்பெற்றிருக்கின்றன.

பாடல் எண். 52

மீனாட்சிஅம்மை குறம்

கூடல், புனவாயில்,
கொடுங்குன்று, பரங்குன்று,
குற்றாலம், ஆப்பனூர்,
பூவணம், நெல்வேலி,

ஏடகம், ஆடானை,
திருக்கானப் பேர்,சுழியல்,
இராமேசம், திருப்புத்தூர்,
இவைமுதலாம் தலங்கள்.

— குமரகுருபர சுவாமிகள்

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

# பாட்டு முதற்குறிப்பு, தொடர்ச்சி

## பாட்டு முதற்குறிப்பு, தொடர்ச்சி

# பாட்டு முதற்குறிப்பு, தொடர்ச்சி

